Phone: No. 2241 | தின இதழ் | Regd. No. M. 5934

# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.

மலர் 14] பக்கம் 4 : : விலை அணா 1 [இதழ் 350

சென்னை 9-8-58 விளம்பி, ஆடி-25 சனி (வெளியூர் 10-8-58 விளம்பி, ஆடி-26 ஞாயிறு)

### செத்த ஈக்கள் ஒரு பவுண்டுக்கு ஒரு ரூபாய்!

காத்தமண்டு, ஆக. 8—

செத்த ஈக்கள் ஒரு பவுண்டுக்கு சன்மானம் அரை ரூபாய் என்றிருந்ததை நேபாள சர்க்கார் ஒரு ரூபாய் ஆக்கியுள்ளனர். பரவும் காலராவைத் தடுப்பதற்கே நேபாள சர்க்கார் இந்த ஈ வேட்டையில் ஈடுபட்டுள்ளனர்.

### செல்வம் கொழிக்கும் சோவியத் வைரச் சுரங்கம்

மாஸ்கோ, ஆக. 8—

சோவியத் நாட்டின் வடகிழக்குப் பகுதியிலுள்ள யாகுட்ஸ்கில் உலகிலேயே மிக மிகச் செல்வம் கொழிக்கும் வைரச் சுரங்கம் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

# நேரு கூற்று: தவறான படப்பிடிப்பு

## அரைகுறையான, பொய்யான தகவலை ஆதாரமாகக் கொண்டது

## கம்யூனிஸ்ட் ஊழியர்களே அதிகம் படுகொலை செய்யப்பட்டுள்ளனர்

### நீதி நிர்வாகத்தில் தலையிட வில்லை

### கேரள முதலமைச்சர் ஈ. எம். எஸ். பதில்

திருவனந்தபுரம், ஆக. 8—

கேரளம் பற்றி பிரதமர் நேரு நேற்று அபிப்பிராயம் தெரிவித்தாரல்லவா? இந்தக் கருத்துக்கு இன்று கேரள முதலமைச்சர் ஈ. எம். எஸ். நம்பூதிரிபாட் ஆணித்தரமாக மறுப்புத் தெரிவித்துள்ளார்.

நேருவுக்கு அவர் அளித்துள்ள ஒரு நீண்ட பதிலில் கூறியுள்ளதாவது:

சென்ற சில வாரங்களில் கேரளத்தில் துரதிர்ஷ்டவசமான மனவேதனை அளிக்கக்கூடிய சில சம்பவங்கள் நடந்திருக்கின்றன என்பது உண்மையே. ஆனால் இவற்றைப் பற்றி பிரதமர் நேரு தெரிவித்துள்ள கருத்துக்கள் ஒரு தரப்பிலிருந்து வந்துள்ள கருத்துக்களை ஆதாரமாகக் கொண்டவையாகும். கேரள நிலைமை அபாயகரமாகிவிட்டது; ஆகவே மத்திய சர்க்கார் உடனே தலையிடவேண்டும் என்ற அபிப்பிராயத்தைச்சிருஷ்டிக்க அக்கறை கொண்ட சிலர் கொடுத்துள்ள மிகைப்படுத்தப்பட்ட, அரைகுறையான, தவறான தகவல்களை ஆதாரமாகக் கொண்டே நேரு தனது கருத்தை வெளியிட்டிருக்கிறார் என்று தெரிகிறது.

#### பொறுப்பாளிகள் யார்?

கடந்த 16 மாதங்களில் கேரளாவில் என்ன நிலை உருவாகியுள்ளதென்பதைப்பற்றிவிரிவான முறையில் நேரு பரிசிலனை செய்திருந்தால், அங்கு இன்று ஏற்பட்டுள்ள நிலைமைக்கு பிரதான பொறுப்பாளிகள் காங்கிரசும் இதர எதிர்க்கட்சியினர்களும்தான் என்பதைப் பார்த்திருப்பார். ஏனென்றால் ஓட்டுப் பெட்டிகள் மூலம் அதிகாரத்திற்கு வந்துள்ள கேரள ஆட்சியை எந்தவிதத்திலும் கவிழ்த்துவிட வேண்டும் என்று அவர்கள்தான் ஆதி முதலே சூழ்ச்சி செய்து வருகிறார்கள்.

கேரள நிலைபற்றி பிரதமர் நேரு ஒருதலைப்பட்சமாக விமர்சனம் செய்திருப்பது கேரள காங்கிரசும் ஏனைய எதிர்க்கட்சிகளும் தங்களது அரசியல் முறையற்ற, முட்டுக்கட்டையான, நாசகரமான நடவடிக்கைகளைத் தீவிரப்படுத்துவதற்கே துணைசெய்யும். ஆகவே, இந் நிலையில் கேரளத்தில் சுமூக நிலை ஏற்படுவதில் பிரதமர் நேரு உதவி செய்யும்படி அவரைக் கேட்டுக் கொள்கிறேன்.

#### வராந்திரபிள்ளி சம்பவம்

வராந்திரபிள்ளி சம்பவம் காங்கிரசால் வேண்டுமென்றே ஆத்திர மூட்ட தூண்டிவிடப்பட்டதாகும். இந்தச் சம்பவத்தில் இறந்தவர்கள் அரசியல்வாதிகளோ அல்லது காங்கிரஸ் அனுதாபிகளோ அல்ல. அதற்குப் பதிலாக இந்தச் சம்பவத்தில் இறந்தவர்களில் இரண்டு பேர் கம்யூனிஸ்டுகளைத் தாக்குவதற்காக காங்கிரசால் கைக் கூலி கொடுத்து கொண்டு வரப்பட்ட பரம்பரையான ரௌடிகளாகும்.

இது மட்டுமல்ல, நடந்த 16 மாதங்களில் ஏராளமான கம்யூனிஸ்ட் ஊழியர்களும், விவசாய சங்க, தொழிற்சங்க ஊழியர்களும் பச்சைப் படுகொலை செய்யப்பட்டுள்ளார்கள். இவ்வளவும் காங்கிரஸ் பெருந் தலைவர்களின் பூரண ஆசிர்வாதத்தோடு நடந்துள்ளது.



#### அரசியல் கைதிகள் விடுதலை விஷயம்

நீதி நிர்வாகத்தில் கம்யூனிஸ்டுகள் தலையிட்டு தங்களது ஆட்களுக்கெதிரான வழக்குகளையெல்லாம் வாபஸ் வாங்குகிறார்கள் என்று ஒரு குற்றச்சாட்டு கூறப்

(2-ம் பக்கம் பார்க்க)

## ஒருதலைப் பட்சமான விமர்சனம் நேர்மையல்ல

### விசாரணை முடியும்வரை காத்திருக்கலாகாதா?

### பிரதமர் நேருவின் அறிக்கை பற்றி பொதுச்செயலாளர் அஜய் கருத்து

திருவனந்தபுரம், ஆக. 8—

கேரள சர்க்காரைப் பற்றிப் பிரதமர் நேரு கூறியுள்ள கருத்துக்கள் ஒருதலைப் பட்சமானவை என்று இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளர் அஜய்கோஷ் பத்திரிகை நிருபர்களிடம் கூறினார்.

இதர பல ராஜ்யங்களிலும் மோசமான நிலை ஏற்பட்டுள்ளது. ஆனால் அந்த ராஜ்ய சர்க்கார்களை பிரதமர் பகிரங்கமாக விமர்சிக்கவில்லை. சம்பவங்களுக்கு ஒரு கட்சி மட்டுமே பொறுப்பு என்று பிரதமர் கூறுவது ஆட்சிபீடத்திலுள்ள கட்சியையே குறிப்பிடும் என்றும் இது மிகவும் நேர்மையற்ற பேச்சு என்றும் அஜய் கூறினார்.

மறு கட்சிக்கு என்ன சொல்ல இருக்கிறது என்பதைக் கேட்கும் வரையில் நேரு பொறுத்திருக்கலாமல்லவா. இரண்டு வருடங்களுக்கு முன் பாட்னாவில் சில சம்பவங்கள் நிகழ்ந்தன. பின்னால் நடைபெற்ற நீதி மன்ற விசாரணையில் போலீஸ் அளவு மீறிய பலாத்காரத்தைக் கையாண்டது என்று முடிவும் கூறப்பட்டது. இருந்தும் பிரதமர் மாணவர் மீதே குறை கூறினாரே ஒழிய சர்க்காருக்கு எதிராக ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை என்று அஜய் சுட்டிக்காட்டினார்.

கேரள சம்பவங்களைப் பற்றி ஒரு சர்வாம்ச நீதிமன்ற விசாரணை நடத்த உத்தரவிடப்பட்டுள்ளது. சட்டத்தைத் தம்மிஷ்டப்படி உபயோகித்தது யார் என்பது உட்பட விசாரணை செய்யப்படும். எனவே பொறுப்புள்ள பதவியில் இருக்கும் நேரு இவ்வாறு விமர்சனம் செய்வதைத் தவிர்த்திருக்கலாம் என்றார்.

கேரளத்திலுள்ள நிலைபற்றி கேரள ராஜ்ய கம்யூனிஸ்ட் கட்சி சமர்ப்பித்துள்ள அறிக்கை பரிசிலனை செய்யப்படும் என்றும், நேரான தகவல்கள் இப்பொழுது கிடைத்திருப்பதாயும், தேவிகுளம் உபதேர்தலுக்குப் பிறகே இந்த சம்பவங்கள் ஏற்பட்டுள்ளதாயும் அஜய் கூறினார்.

## தமிழக அரசியல் கட்சிகளுக்கு ஜனாதிபதி ராஜேந்திர பிரஸாத் பாராட்டு

### மாணவர்களைக் கட்சி அரசியலில் ஈடுபடுத்துவதில்லை என்றமுடிவுக்கு மகிழ்ச்சி

#### இதர ராஜ்யங்களும் பின்பற்றுக!

சென்னை, ஆக. 9—

சென்னை ராஜ்ய சர்வகட்சித் தலைவர்கள் கூடி, மாணவர்களை தங்கள் கட்சிகளில் சேரும்படி தூண்டுவதில்லையென்று செய்து கொண்டுள்ள கௌரவ ஒப்பந்தத்தை நான் பெரிதும் பாராட்டுகிறேன், வரவேற்கிறேன். புத்திசாலித்தனமான இந்த முடிவை நாட்டின் மற்றப் பகுதிகளிலுள்ள கட்சித் தலைவர்களும் பின்பற்றுவார்கள் என எதிர்பார்க்கிறேன் என்று ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத் கூறினார்.

சென்னைக் கல்லூரி மாணவர்கள் கூட்டத்தில் நேற்று ராஷ்ட்ரபதி பேசினார். அவர் மேலும் பேசுகையில், 'மாணவர்கள் அரசியலில் கலந்து கொள்ளக் கூடாது என்று

(3-ம் பக்கம் பார்க்க)

### ஆட்டோ ரிக்ஷாக்களுக்கும் டாக்ஸி மீட்டர்கள்

சென்னை, ஆக. 8—

ஆட்டோ ரிக்ஷாக்களுக்கும் இனி டாக்ஸிகளில் உள்ளது போல மீட்டர்கள் வைக்கவேண்டுமென்று சென்னை சர்க்கார் உத்தரவிட்டுள்ளனர். இந்த உத்தரவிற்கேற்ப சென்னை போக்குவரத்து சாதன விதிகள் திருத்தப்பட்டுள்ளன.

## ஆமதாபாத்தில் பூரண ஹர்த்தால்

### மஹா குஜராத் போராட்ட தியாகிகளுக்கு நினைவுச் சின்னம்

ஆமதாபாத், ஆக. 8—

மஹாகுஜராத் மொழிவாரி ராஜ்ய அமைப்புக்கான போராட்டத்தில் இன்னுயிர் நீத்த தியாகிகளை நினைவு கூறும் முகத்தான் இங்கு பரிபூரண ஹர்த்தால் அனுஷ்டிக்கப்பட்டது. மஹாகுஜரா[t] ஜனதா பரிஷத்தின் அறைகூவலை ஒட்டி கடைகள், பள்ளிக்கூடங்கள் அனைத்தும் மூடப்பட்டன.

1956 ஆகஸ்ட் 8ந் தேதி நடைபெற்ற துப்பாக்கிப் பிரயோகத்தில் உயிரிழந்த மஹா குஜராத் இயக்கத் தியாகிகளுக்கு அவர்கள் சுடப்பட்ட இடத்தில் மலர் வடங்கள் சமர்ப்பித்து அஞ்சலி செலுத்தினர் மாணவர்கள்.

மாலையில் பிரம்மாண்டமான ஊர்வலம் புறப்பட்டு இந்துலால் யாக்னிக் எம்.பி. தலைமையில் நகரில் பவனி வந்தது. எழு மணங்கு எடையுள்ள தியாகிகள் நினைவுச் சின்னத்தை வண்டியில் எடுத்துச் சென்றனர்.

தீப்பந்தம் ஏந்திய கரம் ஒன்றின் உருவில் மஞ்சள் நிறம் பூசிய நினைவுச் சின்னத்தை யாக்னிக் காங்கிரஸ் மாளிகைக்கு முன்னால் ஸ்தாபித்தார்.

### படகு கட்டணச் சலுகை

#### முன்னாள் நீதிபதி விசாரணை செய்வார்

திருவனந்தபுரம், ஆக. 8—

படகு கட்டணச் சலுகை சம்பந்தமாக விசாரணை செய்ய முன்னாள் உயர் நீதிமன்ற நீதிபதி எச். ராமகிருஷ்ணய்யரை கேரள சர்க்கார் நியமனம் செய்துள்ளது

## ம. கிழக்கு நிலைமையை விவாதிக்க ஐ.நா. பொதுச்சபை கூடுகிறது

### வல்லரசுகளின் வெளிநாட்டு மந்திரிகள் கலந்துகொள்வர்

ஐக்ய நாடுகள், ஆக. 9—

மத்திய கிழக்கு நிலைமையைப் பற்றி விவாதிப்பதற்காக ஐ. நா பொதுச்சபை (இந்திய நேர அளவுப்படி) இன்று விடியற்காலை 2·43 மணிக்குக் கூடியது.

பொதுச் சபையின் விசேஷ அவசரக் கூட்டத்தைக் கூட்டுவதென்று நேற்றிரவு பந்தோபஸ்து சபையில் ஏகமனதாகத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

பொதுச்சபைக் கூட்டத்தில் ஸெல்வின் லாயிட் (பிரிட்டன்), டல்லஸ் (அமெரிக்கா), குரோமிகோ (ரஷ்யா) சிட்னிஸ்மித் (கனடா), டாக்டர் மூகம்மது பவுசி (ஐக்ய அரபுக் குடியரசு) ஆகிய பிரபல வெளிநாட்டு மந்திரிகள் அடுத்த வாரத்தில் முக்கியமான விவாதத்தின் போது பொதுச்சபைக் கூட்டத்தில் கலந்துகொள்வார்கள் என்று தெரிகிறது.

முன்னதாக, பந்தோபஸ்து

(2-ம் பக்கம் பார்க்க)

# ஜனசக்தி

சென்னை 9-8-1958

## பிரதமரின் பேச்சு

பாரதத்தின் பிரதமர், காங்கிரஸ் பேரவையின் தனிப்பெருந் தலைவர் என்ற இரண்டு பெரும் பொறுப்புகளைத் தாங்கி நிற்பவர் பண்டித நேரு. எனவே அவர் பேச்சுக்குத் தனி மதிப்பு உண்டு.

இந்தக் கண்ணோட்டத்தில், கேரள நிலைமையின் மீது அன்னார் எதிரொலித்த கருத்துக்களை நோக்க வேண்டும்.

அந்தப் பேச்சில், காங்கிரஸ் ஆட்சிகளோடு கம்யூனிஸ்டு ஆட்சியையும், காங்கிரஸ்காரர்களோடு கம்யூனிஸ்டுகளையும் ஒப்பிட்டுக் கேரள ஆட்சியையும், கம்யூனிஸ்டுகளையும் குற்றம் சாட்டியிருக்கிறார்.

கேரளத்தில், இன்றைய ஆட்சியில், பெரும்பாலான பொதுமக்கள், 'உயிருக்கும் உடைமைக்கும் பாதுகாப்பில்லை' என்ற உணர்ச்சிக்கு இரையாகி அஞ்சிக்கிடக்கிறார்கள். வேறு எந்த ராஜ்யத்திலும் இல்லாத வகையில், ஆள்வோரின் கட்சிக்காரர்களின் வழக்குகள் வாபஸ் ஆவதும், பிடிக்காத அதிகாரிகளை இடமாற்றங்கள் செய்வதும் நடைபெறுகின்றன. துப்பாக்கிப் பிரயோகங்கள் பரவாயில்லை என்று சொல்லத்தக்க அளவுக்கு அரசியல் கொலைகள் நடைபெறுகின்றன என்று கண்டனக் கணைகள் பாய்ச்சியிருக்கிறார். கேரளக் காங்கிரஸ்காரர்கள், பி. சோ, பு. சோ.க்கள் இவர்கள் சாட்டும் குற்றங்களெல்லாம் சரி என்று என்னால் சொல்ல முடியாது. ஆயினும் அவற்றில் ஓரளவு உண்மையிருக்குமென்றே தோன்றுகிறது என்றும் கூறியிருக்கிறார்.

அவர் காங்கிரஸ் தலைவராக மட்டுமிருந்து இவ்வாறு பேசியிருந்தால், கட்சிச் சார்பாக, கம்யூனிஸ்டுகளை வழக்கமாகத் தாக்கிப் பேசுகிற, செவி புளித்துப்போன பேச்சு என்று விட்டு விடலாம். ஆனால் இந்த, கேரள ஆட்சியைக் கட்டுப்படுத்தவும் பிரதிநிதிப்படுத்தவும் வல்ல மத்திய ஆட்சியின் முதல்வர் என்ற மிகப் பொறுப்பான நிலையிலிருந்து பேசியிருக்கிறார். கேரளக் காங்கிரஸ் மூவர் குழு, பி. சோ. பட்டம் ஆகிய எதிர்க்கட்சித் தலைவர்களோடு மட்டும் கலந்து பேசிவிட்டு, கேரள முதலமைச்சர் நம்பூதிரிப்பாட்டோடு, நன்றாக விளக்கமாகக் கலந்து பேசாமல், கேரள ஆட்சியையும் கம்யூனிஸ்டுகளையும் தாக்கிப் பேசியிருக்கிறார். இத்தகைய ஒருதலைப் போக்கு அழகுதானா? இந்திய ஜனநாயக வளர்ச்சிக்கு அடுத்ததுதானா? என்பதை ஜனநாயகத்திலும் நேரான நீதியிலும் நம்பிக்கை உடையவர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

கேரள சர்க்கார் ஒரு நீதிபதி மூலம் ஒரு சர்வாம்ச விசாரணை நடத்தப் போவதாக அறிவித்து, அதற்கான ஏற்பாடுகளைச் செய்துகொண்டிருக்கும்போது, பிரதமரின் இந்த ஒரு தலைப் பேச்சு அந்த நீதி விசாரணை வெற்றிகரமாக நடப்பதைப் பாதிக்கும். இது எதிர்க்கட்சியான காங்கிரஸ் கையைப் பலப்படுத்தி சர்க்கார் கையை பலவீனப்படுத்தும். அதே பேச்சில், தாம் கம்யூனிஸ்டு-எதிரி அல்லவென்றும், ஒரு சிறந்த இந்தியன் என்றும் உலகறியப் பேசும் பிரதமர், விசாரணை முடிந்து யார் யார் குற்றவாளி? எந்த அளவு குற்றவாளி என்று தெரிந்தபின் தமது நிர்ணயிப்பைச் சொல்வதுதானே முறை? அத்தகைய முறையின்றி, ஒரு கட்சியைத் தாக்கிப் பேசியிருப்பது அழகா? பொது மக்கள் சிந்திக்க வேண்டும்.

அண்மையில் முதுகுளத்தூர், ஜாம்ஷெட்பூர், பம்பாய் போன்ற இடங்களில் நடந்த சம்பவங்கள் சின்னஞ்சிறியவைகளா? காங்கிரஸ் ஆட்சியில் நடந்தால் பாதுகாப்பற்ற உணர்ச்சி மக்களுக்கு ஏற்படாதா? கேரள அரசாங்கத்தைத் தாக்குகிறாரே இந்தப் பாணியில் அவைகளைப் பற்றி ஏன் பிரதமர் ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை? காங்கிரஸ் ஆட்சி—கம்யூனிஸ்டு ஆட்சி என்ற பேத உணர்ச்சிதானே? பொது மக்கள் சிந்திக்க வேண்டும்.

ஏப்ரலில் பிரதமர் கேரளத்திற்கு வருகை தந்தார். அப்பொழுது காணாத "பாதுகாப்பின்மை" பூதம், இப்பொழுது, இந்த மூன்று மாதங்களுக்குள் எப்படிப் பயங்கரமாக உருவாகிவிட்டதென்பதைப் போதிய ஆதாரங்களோடு இரு தரப்பினரையும் ஆரத்திர விசாரித்துப் பின்னர் கேரள ஆட்சியைக் கண்டித்திருக்க வேண்டும். அப்படிச் செய்யாமல், காங்கிரஸ்காரர்கள் குறிப்பை அடிப்படையாகக் கொண்டு ஒரு தலையாகத் தாக்குவது நேரு போன்றார்க்கு அழகா? பொது மக்கள் சிந்திக்க வேண்டும்.

கம்யூனிஸ்டு ஆட்சி கேரளத்தில் ஏற்பட்ட பிறகு நெடுகலும் அரசியல் நோக்கோடு, கிறிஸ்டபர் குண்டர்களும் இதர வெறியர்களும் நடத்திய கொலைகளையும் கொள்ளைகளையும் மத்திய அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டு வந்தபோதெல்லாம் தெரிந்தே ஒரு சொல்லும் சொல்லாத பிரதமர், இன்று ஒரு தலையாக கம்யூனிஸ்டுகளைத் தாக்குவது அழகா? பொதுமக்கள் சிந்திக்க வேண்டும்.

போகப் போக, விசாரணை மூலமும், பிற வழிகளாலும் கேரளத்தின் குழப்பத்திற்குக் குற்றவாளிகள் யார்? குற்றம் எந்த அளவு? என்று தெரியவரும் என்பதில் சந்தேகமில்லை.

பண்டித நேரு அதிகாரத்திலும் புகழிலும் நம் எல்லோரையும் விடப் பெரியவராயிருக்கட்டும். ஆனால் நீதியும் ஜனநாயகமும் நமக்கு அவரைவிடப் பெரியவை.

## மத்தியக் கிழக்கு . . .

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

சபைக் கூட்டத்தில் சோவியத் பிரதிநிதி சோபலேவ், உச்சகட்ட மகாநாடு நடைபெறாமல் போனதற்கு பிரிட்டனும் அமெரிக்காவும்தான் காரணமென்று குற்றம் சாட்டினார்.

இந்தியா, ஐக்கிய அரபுக் குடியரசு, பிரான்ஸ் ஆகிய நாடுகள் உச்சகட்ட மகாநாட்டு யோசனையை ஆதரித்திருந்தன. ஆனால் அமெரிக்கா பலவிதப் போலிச் சாக்குப் போக்குகளைக் கூறி மகாநாடு நடைபெறாமல் செய்தது என்றும் சோபலேவ் கூறினார்.

## "பகைத்தவன் சொல்லாததில்லை"-(2)

### (ஜீவா)

சர்க்காருக்குச் 'சரணாகதி'யும் இல்லை; மாணவர்களுக்கு "மகத்தான வெற்றியும்" இல்லை. கிளர்ச்சி நிறுத்தத்தால் கேரள மக்களுக்கும் ஜனநாயகத்திற்குமே வெற்றி.

அப்படியானால், எதிர்க்கட்சிகளும், பெரும்பாலான பத்திரிகைகளும் மேற்கண்ட ரீதியில் "தோல்வி"யும் "வெற்றி"யும் ஏன் கொண்டாடுகின்றன?

இதற்கு அடுத்த கட்டுரையில் பதில் சொல்வோம். இந்தக் கட்டுரையில் இரண்டாவது பிரச்னையைச் சற்று அலசிப்பார்க்கலாம்.

கிளர்ச்சி பிறந்தவிதம், வளர்ந்தவிதம், செயற்பட்ட விதம், பலன் தந்த விதம்—ஆகியவைகளைக் கண்டு கொண்டால்தான், நீதி விசாரணை எந்த அளவில் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதில் நமக்கு ஒரு வகைதொகையான கருத்துக் கிடைக்கும்.

கிளர்ச்சி உணர்ச்சி, "ஒரு அணாக் கட்டணச் சலுகை" கிடைத்து வந்த குறிப்பிட்ட இரண்டு பள்ளிக்கூடங்களில் வெடித்து, கத்தோலிக்க நிர்வாகப் பள்ளிக்கூடங்களுக்கெல்லாம் பரப்பப்பட்டு பின்னர் இதர பள்ளிக்கூடங்களுக்கும் பரப்பப்பட்டது.

சட்டங்களை மீறச் செய்து கலாசாலைகளிலிருந்தும் கல்லூரிகளிலிருந்தும் மாணவர்களைத் தெருவில் கொண்டுவருவது இன்றையச் சூழ்நிலையில் விரும்பத்தக்கதல்ல. இதை எல்லா அரசியல்வாதிகளும், கல்விமான்களும் அட்டியில்லாமல் ஒப்புக்கொள்வார்கள்.

### ஏன் உடுக்கடித்தனர்?

ஆனால் கேரளத்தில் கத்தோலிக்கச் சாமியார்களும், எதிர்க்கட்சிகளும் மாணவர் வேலைநிறுத்தத்திற்கு உடுக்கடித்தது. தூப தீபம் போட்டனர். தேசியப் போராட்டக் காலத்திலும் வேறு எந்த நாளிலும் மாணவர் வேலை நிறுத்தத்திற்கு மறந்தும் இடம் கொடாதவர்கள் இந்தச் சாமியார்கள். பின், காங்கிரஸ்காரர்களோ, அதிகாரத்திற்கு வந்ததிலிருந்து கடந்த 11 ஆண்டுகளாக வேலைநிறுத்தம் தேசத் துரோகம் என்று மாணவர்களுக்குப் புத்திமதி சொல்லி வருகிறவர்கள். இத்தகைய பண்பிற் சிறந்தவர்கள் ஏன் வேலைநிறுத்தத்தை முடுக்கிவிட்டனர்? சாமியார்கள் முண்டசேரியின் கேரள கல்வி மசோதாவைப் பழிவாங்க முடுக்கிவிட்டனர். எதிர்க்கட்சிகள், கம்யூனிஸ்டு மந்திரி சபை ஒழிப்புக்காக முடுக்கிவிட்டனர்.

ஆர்ப்பாட்டங்களை, மறியல்களைத் தடுக்க, சட்டவிரோதக் கூட்டங்களைத் தவிர்க்க, சர்க்கார் 144 தடை உத்தரவு பிறப்பித்தனர். சட்டவிரோதமாகக் கூடியவர்களைக் கலைக்க பிரம்படி நடத்தினர். கிளர்ச்சி வலுத்தது. மாணவர்களும், அவர்களோடு அணிவகுத்து நின்ற கிறிஸ்தோபர் குண்டர்களும், எதிர்க்கட்சிகளின் தொண்டர்களும், வெறி கொண்டு எத்தனையோ விதமான நாச நடவடிக்கைகளில் இறங்கினர். அடக்குமுறைப் பாதையில் இறங்கி விட்ட சர்க்கார் மேலும் அடக்குமுறையை நாடிற்று.

### அமைதி முக்கியமல்ல அரசியல் வஞ்சகமே முக்கியம்

எதிர்க்கட்சிகள் சர்க்காரின் அடக்குமுறையைக் காரசாரமாகக் கண்டித்தன என்பதையும், கிளர்ச்சியில் நிகழ்ந்த தகாத செயல்களைப் பற்றி ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை என்பதையும் ஊன்றி கவனிக்க வேண்டும். அதே பொழுதில் கேரளத்தின் அமைதியை விட கம்யூனிஸ்டு மந்திரிசபைஒழிப்பையே முதன்மைப்படுத்திய கேரளமாகாணக் காங்கிரஸ்குழுவும், பி. சோ.க் குழுவும், அடக்குமுறை-எதிர்ப்பு நாள் கொண்டாட அறைகூவல் விடுத்தனர். இதன் விளைவாக கைதுகளும், ஆர்ப்பாட்டங்களும், போலீசோடு கைகலப்புகளும் மும்முரித்தன.

கம்யூனிஸ்டு ஆட்சியை ஒழித்தாலன்றிக் கேரளம் ஜனநாயக நல்வாழ்வு பெற முடியாதென்று, எதிர்க்கட்சிகள் மெய்யாகவே கருதலாம்; அதை யாரும் குறைகூற முடியாது. ஆனால் கம்யூனிஸ்ட் ஆட்சியை ஒழிப்பதற்கு சமாதானமான வழியைப் பற்றி வாய்கிழியப் பேசுகிற காங்கிரஸ்காரர்கள் என்ன செய்ய வேண்டும்? ஓட்டுச் சாவடிக்குச் சென்று, சட்டசபையில் பெரும்பான்மையாக வந்தல்லவா கம்யூனிஸ்டுகளை ஆட்சிபீடத்திலிருந்து ஒழிக்கவேண்டும்? அதை விட்டுவிட்டு சட்டவிரோதமான நேரடி நடவடிக்கைகளில் இறங்குவதா சமாதானமான வழி? அதிலும், பால்மணம் மாறாத சிறுவர்-சிறுமிகளைத் திரட்டி, அதிகார வர்க்கத்தோடும் போலீஸ் படைகளோடும் மோதவிடுவதா சமாதானத்திற்குச் சிறந்த வழி?

இந்தக் கிளர்ச்சிக்கு வழிகாட்டிகளாகவும் சூத்திரதாரிகளாகவும் நின்றதிலேயே எதிர்க் கட்சிக்காரர்கள் சுயதோல்வி அடைந்துவிட்டார்கள்.

எனவே பேச்சு வார்த்தைகளின்போது கிளர்ச்சித் தலைவர்களுக்கும் எதிர்க் கட்சித் தலைவர்களுக்கும் குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுத்தது.

### முழு விசாரணை

விசாரணை வேண்டும் என்றார்கள். ஆனால் போலீஸார் மாணவர்கள் மீது நடத்திய "மிலேச்சத்தனமான தடியடிப் பிரயோகத்தை" மட்டும் விசாரணைக்கு விடவேண்டும் என்றார்கள். இதை சர்க்கார் தரப்பினர் ஒப்புக்கொண்டார்களா? இல்லை.

சர்க்கார் மறுபுறத்தில், மாணவர் கிளர்ச்சியைப் பற்றி ஒரு சர்வ வியாபக விசாரணை நடத்தவேண்டும் என்றும் குறிப்பாக இந்தக் கிளர்ச்சியில் திரை மறைவில் நின்றவர்களைப் பற்றியும் விசாரணை நடத்தவேண்டும் என்றார்கள். கிளர்ச்சிக்காரர்களும் எதிர்க்கட்சிக்காரர்களும் இதை ஒப்புக்கொண்டார்களா? இல்லை.

ஆனால் சர்க்காரின் இந்தப்பிரரேபணையை கிளர்ச்சிக்காரர்கள் பின்னர் ஒப்புக் கொண்டு கிளர்ச்சியை நிறுத்தி விட்டார்கள். சொல்லுங்கள்! சர்வ வியாபக விசாரணை வேண்டுமென்பதில் கடைசிவரை உறுதியாக இருந்து, கிளர்ச்சிக்காரர்களையும் ஒப்புக்கொள்ளும்படி செய்த கேரள சர்க்கார் சரணாகதி அடைந்துவிட்டார்களா? அல்லது போலீஸ் தடியடிப் பிரயோகத்தை மட்டும் விசாரணைக்கு விடவேண்டும் என்று ஆரம்பத்தில் பிடிவாதமாயிருந்து இறுதியில் சர்வ வியாபக விசாரணை என்ற சர்க்கார் பிரரேபணையை ஒப்புக் கொண்டவர்கள் மகத்தான வெற்றி பெற்றார்களா? யாருக்குச் 'சரணாகதி'? யாருக்கு 'வெற்றி'? சொல்லுங்கள்!

### ஆஜர் கோரிக்கை வைத்தனரா?

கைது செய்யப்பட்ட மாணவர்களையெல்லாம் விடுதலை செய்தது, வழக்குகளையெல்லாம் வாபஸ் பெற்றது, விசாரணை முடியும்வரையில் எல்லா மாணவர்களுக்கும் கட்டணம் இலவசம் என்றது, கிளர்ச்சி நடத்திய ஒருமாத காலத்திற்கும் பள்ளியில் ஆஜர் என்று ஒப்புக்கொண்டது—இவைகளெல்லாம் மாணவர்களுக்கு வெற்றி என்று சொல்லலாமா? இவைகளைக் கோரிக்கைகளாகவைத்து மாணவர் போராடியிருந்தாலும், இவைகளுக்கு இணங்க முடியாது என்று சர்க்கார் பிடிவாதம் காட்டியிருந்தாலும் அப்படிச் சொல்லலாம்.

இரு திறத்தாரும் இவற்றைக் குறிப்பிடவில்லை. எனவே இவற்றைக் கொண்டு "வெற்றி தோல்வி" பேசுவதில் அர்த்தமே இல்லை.

மாணவர் கிளர்ச்சி நிறுத்தப்பட வேண்டும் மாணவர் கிளர்ச்சி என்ற திரையின் பின்னால் நிற்கும் 'அரசியல் பகைவர்களின் முகமூடி கிழிக்கப்பட்டு, நிஜரூபம் காட்டப்பட வேண்டும். திட்டங்கள்-சீரமைப்புகள் வெற்றிபெறக் கேரளத்தில் அமைதி நாட்டப்பட வேண்டும். அதற்காக, மாணவர்களின் சூடு தணிந்து, சகஜ நிலை ஏற்பட வேண்டும். இதற்கு முதலிடம் கொடுத்த கேரள சர்க்கார், மாணவர்களும், எதிர்க்கட்சிகளும் கனவிலும் நினைக்காத 'விசாரணை முடியும்வரை யாருக்கும் கட்டணம் இல்லை' என்ற அம்சத்தையும் சேர்த்து சமரஸ முடிவை அறிவித்தார்கள்.

### விசாரணையில் வெளிச்சமாகும்

விசாரணைக்குப் பின்தான், கிளர்ச்சியை ஒட்டி யார் பக்கம் எத்துணைத் தவறு என்பதை அறிய வழி பிறக்கும். நீதி விசாரணை முடிவை ஏற்று அதன்படி நடக்கத் தயார் என்று கம்யூனிஸ்டு சர்க்கார் வாக்குறுதியளித்திருக்கிறது.

இந்த வாக்குறுதிப்படி நடக்கும் பாரம்பரியத்திற்கும் காங்கிரஸுக்கும் ஏணி வைத்தாலும் எட்டாது. கடந்த 11 ஆண்டுகளில் கொடுத்த வாக்குறுதிகளையும் நீதிமன்றத் தீர்ப்புகளையும் காலடியில் போட்டு மிதித்துத் துவைத்ததுதான் மக்கள் கண்ட காங்கிரஸ் பாரம்பரியம்.

## நேரு கூற்று . . .

(1-ம்பக்கத் தொடர்ச்சி)

பட்டுள்ளது. இந்தக் குற்றச்சாட்டைப் பொறுத்த வரையில், கேரள அரசாங்கம் பதவியேற்றவுடன் சகல அரசியல் கைதிகளையும் விடுதலை செய்வது என்றும், அரசியல் வழக்குகளையெல்லாம் வாபஸ் வாங்குவதென்றும் முடிவு செய்தது. இந்த முடிவினால் கம்யூனிஸ்டுகள் மட்டுமல்ல, காங்கிரஸ், பி. சோ., பு. சோ., லீக் காரர்களும் பலனடைந்துள்ளார்கள்.

வழக்குகள் வாபஸைப் பொறுத்தவரையில், விவசாயிகள், தொழிலாளர் தகராறு அல்லது ஒரு அரசியல் கிளர்ச்சி சுமூகமாக தீர்த்து வைக்கப்படும்போது அது சம்பந்தப்பட்ட வழக்குகளும் வாபஸ் பெறப்பட வேண்டியுள்ளது. இது நீதி நிர்வாகத்தில் தலையிடுவதாகாது; அதற்குப் பதில் கிளர்ச்சிகள் அல்லது தகராறுகள் சமரசமாக முடிந்தபிறகு ஒரு சௌஜன்ய சூழ்நிலை ஏற்படுத்தவேண்டும் என்னும் நல்லெண்ணத்தோடேயே இது செய்யப்படுகிறது.

### பாதுகாப்பற்ற நிலை இருக்கிறதா?

கேரளத்தில் ஒரு பெரும் பகுதியினர் சந்தோஷமற்றும் பாதுகாப்பற்றும் இருப்பதாகவும், ஒரு பிரஜை என்கிற வகையில் தங்களுக்குரிய நியாயம் வழங்கப்படவில்லை என்று உணர்வதாகவும் பிரதமர் நேரு கூறியிருப்பது கண்டு வியப்படைகிறேன். இது ஒரு தவறான படப்பிடிப்பு என்பதைக் கூறிக்கொள்ள விரும்புகிறேன்.

சர்க்காரை ஆதரிப்பவர்களோ அல்லது எதிர்க்கட்சியை ஆதரிப்பவர்களோ சட்டத்தைத் தங்கள் கையில் எடுத்துக் கொள்ளாதபடி பாதுகாப்பதில் கேரள சர்க்காரும், கம்யூனிஸ்ட் கட்சியும் ஆவலாக இருக்கிறது. அதோடு தேசப் புனர் நிர்மாணப் பணியில் சகல பகுதி மக்களிடையேயும் சுமூகமான உறவு நிலைபெற்று நிற்கவேண்டும் என்பதில் நாங்கள் மிகுந்த அக்கறையோடிருக்கிறோம். இத்தகைய ஒத்துழைப்பை சகலரிடமும் நாங்கள் மனப்பூர்வமாக நாடினோம். ஆனால் இந்த ஒத்துழைப்பு காங்கிரஸ் மற்றும் எதிர்க்கட்சிகளிடமிருந்து கிட்டவில்லை".

இவ்விதம் கேரள முதலமைச்சர், ஈ. எம். எஸ். நம்பூதிரிப்பாட் தமது நீண்ட பதிலில் குறிப்பிட்டுள்ளார்.

# மூணாறில் தினத்தந்தி, தினமலர், தமிழ்நாடு நிருபர் செய்தி சேகரிக்கும் லட்சணம்

## காங்கிரஸ் எம். எல். ஏ. தரும் தகவல்களே!

மூணாறு, ஆக. 5—

மூணாறு பகுதியில் தினத்தந்தி, தினமலர், தமிழ்நாடு ஆகிய பத்திரிகைகளுக்கு நிருபராக இருக்கும் எஸ். எஸ். சுவாமி என்பவர் எப்படி செய்தி சேகரித்து அனுப்புகிறார் என்பதைப்பற்றி திரு. தாவீது, திரு செல்லம் ஆகிய இருவரும் கீழ்க்கண்ட செய்தியை அனுப்பியிருக்கிறார்கள்.

தினத்தந்தி, தினமலர், தமிழ்நாடு ஆகிய மூன்று பத்திரிகைகளும் எந்தவொரு குறிப்பிட்ட கட்சிக்கும் வெளிப்படையாக உட்பட்டதல்ல. நடுநிலைமை பத்திரிகைகள் என்று கூறப்படுபவை.

தினத்தந்தி பத்திரிகையை எடுத்துக் கொண்டால், கடந்த 2, 3 ஆண்டுகளாக பாரபட்சமாக, கம்யூனிஸ்ட் கட்சிக்கு விரோதமாக செய்தி வெளியிட்டு வருகிறது.

மற்றப்படி தின மலரும், தமிழ்நாடும், தினத்தந்தி போல் விரோத குரோதத்துடன் நடந்துகொள்ளுவதில்லை. அப்படியிருக்க இவற்றின் மூணாறு நிருபர், மேற்படி பத்திரிகைகளின் கொள்கையை எப்படி கடைப் பிடிக்கிறார்.

இந்த நிருபர் எப்போதும் காங்கிரஸ் எம். எல். ஏ. கணபதியின் வீட்டுக்குச் சென்று அவரிடமே செய்திகள் கேட்டு வருகிறார். அவர், கேரள அரசாங்கத்துக்கு விரோதமாகக் கொடுக்கும் செய்திகளை பத்திரிகைகளுக்கு அனுப்புகிறார்.

உதாரணமாக, ஜூலை 23-ம் தேதி தினத்தந்தியிலும், மற்றுமுள்ள பத்திரிகைகளிலும் மூணாறு தமிழ் ஆரம்பப்பாடசாலையில், மலையாள ஆசிரியை மாற்றப்படுவாள் என்று கணபதி எம். எல். ஏ. கூறியதாக செய்தி வெளியாகியிருக்கிறது. ஆனால் நடந்தது என்ன?

மலையாள ஆசிரியை நியமிக்கப்பட்ட அதே வாரத்திலேயே, "நியமிக்கப்பட்டதாக செய்தி வெளியான போதே, அந்த ஆசிரியையும் வேறு பள்ளிக்கு மாற்றலாகிவிட்டார். பிறகு மூணாறு பள்ளிக்கு 2 தமிழ் ஆசிரியைகளும் நியமிக்கப்பட்டு, போதுமான அளவு ஆசிரியர்களுடன் இப்போது பாடசாலை ஒழுங்காக நடைபெற்று வருகிறது.

சிலர் இந்த நிருபரிடம் போய், "மலையாள ஆசிரியை நியமிக்கப்பட்டாள் என்று எழுதினாயே, நீ நேர்மையாக நடப்பதானால் மலையாள ஆசிரியை மாற்றப்பட்டதையும் எழுதியிருக்கலாமே' என்று இடித்துரைத்தனர். அதன் பிறகுதான் இந்த நிருபர், "மலையாள ஆசிரியை மாற்றப்படுவாள்" என்று எம். எல். ஏ. கணபதி கூறியதாக எழுதியிருக்கிறார். உண்மை என்னவென்றால், மாற்றப்படுவாள் என்று எம். எல். ஏ. கூறியதாக எழுதும் முன்னரே அந்த ஆசிரியை மாற்றப்பட்டுவிட்டார்கள் என்பதை நிருபர் அறிவார்.

தமிழ் மக்களை கம்யூனிஸ்ட் சர்க்கார் நசுக்குவதாக துஷ்பிரசாரம் செய்வதற்கே இந்த மாதிரி தப்பெண்ணம் உண்டாகுமாறு செய்திகளை அனுப்புகிறார்.

### இனப்பகை மூட்டுகிறார்

ஆகஸ்டு 3-ம் தேதி தமிழ்நாடு, 2-ம் தேதி தினத்தந்தி பத்திரிகைகளில் போத்தன் பிலீப் ஏலத் தோட்டத்தில், பொதுவுடைமையர் காங்கிரஸ்காரர்களை தாக்கியதாகவும், மலையாளிகள் தமிழர்களைத் தாக்கியதாகவும் பொருள்பட செய்திகள் எழுதியுள்ளார். ஆனால் நடந்தது என்ன? தொழில் தகராறு காரணமாக தொழிலாளிகளுக்குள் ஏற்பட்ட வேறுபாட்டின் காரணமாக பூசலும் கைகலப்பும் ஏற்பட்டிருக்கிறது. இந்தச் சம்பவத்தை கம்யூனிஸ்ட் கட்சியினரைப் பாதிக்கும் முறையில் செய்திகள் அனுப்பி, மலையாளி—தமிழன் மோதல் என்று இனப் பகையையும் கிளப்பியுள்ளார். இந்த முறையில் செய்திகள் வெளியிடுவதின் மூலம், இங்கு உள்ள உண்மை நிலைமை மூடி மறைக்கப்படுகிறது. தவறானதும், இனப்பகையைத் தூண்டிவிடுவதுமான செய்திகளை, தமிழ் நாட்டில் பரப்பும் வாகனங்களாக தினத்தந்தியும், தினமலரும், தமிழ்நாடும் விளங்க நேரிடுகிறது.

இனிமேலாவது நிருபர் திருந்துவாரா? அவரைத் திருத்த சம்பந்தப்பட்ட பத்திராதிபர்கள் கவனம் செலுத்துவார்களா?

---

## ஆயிரம் காங்கிரஸ்காரர்கள் ராஜிநாமா

ஜெய்ப்பூர், ஆக. 4—

ராஜஸ்தான் பிரதேச காங்கிரஸ் அக்ராசனர் ஜெய்ப்பூர் உயர்நீதி மன்றக் கிளர்ச்சி விஷயத்தில் அனுசரித்து வரும் போக்கை ஆட்சேபித்து இந்த ஜில்லாவிலுள்ள ஆயிரம் காங்கிரஸ் உறுப்பினர்கள் காங்கிரஸிலிருந்து ராஜிநாமாச் செய்திருக்கின்றனர்.

—ஹிந்துஸ்தான் சமாச்சார்

---

# ரயிலில் பிடிபட்ட 'வித்தவுட்' டிக்கெட்!

## மே மாதத்தில் மட்டும் 35,000 பேர்

கடலூர், ஆக. 6—

தென் ஆற்காடு ஜில்லா பிரயாணிகள் சங்கத்துக்கு, தென் பிராந்திய ரயில்வே பாதுகாப்பு அதிகாரி திரு. சிங்காரவேலு ஒரு கடிதம் எழுதினார். அதில்:

'மே மாதத்தில் மட்டும் 35 ஆயிரத்து 628 பிச்சைக்காரர்களைப் பிடித்தோம்" என்று கூறியிருக்கிறார்.

ஒரு மாதத்தில் 35 ஆயிரத்து சொச்சம்! பிடிபட்டவர் தொகை இதுவென்றால், பிடிபடாதவர் தொகை எத்தனை ஆயிரமாயிரம்!

"காங்கிரஸ் ஆட்சியில் எவ்வளவோ முன்னேறியிருக்கிறோம். எங்களைத் திருத்த முயலும் எதிர்க் கட்சிக்காரர்கள் திருடர்களைப் போன்றவர்கள்" என்றாரே மந்திரி பக்தவத்சலம், அந்த உத்தம சிகாமணியின் பதினோறு ஆண்டு கால சுதந்திர ஆட்சியில் தான் பிச்சைக்காரர் தொகையும் வித்தவுட் டிக்கட் எண்ணிக்கையும் இப்படி ஏறிக்கொண்டிருக்கிறது!

### தேர்தல் இயக்கத்தில் போடி தோழர்கள் பிரசுர விற்பனை

தூத்துக்குடி, ஆக. 6—

தூத்துக்குடியில் தேர்தல் நடந்த நாட்களில் போடிநாயக்கனூரைச் சேர்ந்த தோழர்கள் கணேசன், ராஜா இருவரும் மதுரை நியூ செஞ்சுரி புக் ஹவுஸுக்கு சென்று 50 ரூபாய்க்கு மேற்பட்ட கம்யூனிஸ்ட் இலக்கியங்களை வாங்கிக்கொண்டு, தூத்துக்குடிக்குப் போய் பொதுக் கூட்டங்களில் விற்றார்கள். சுடுதோசை போல் எல்லா புத்தகங்களும் விற்ற ஜோரைப் பார்த்து, "அடடா இன்னும் 100 ரூபாய் புத்தகங்கள் கொண்டுவந்திருந்தால் அத்தனையும் விற்றிருக்கலாமே" என்று வருந்தினர்.

---

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

நான் சொல்லவில்லை. இக்கால நமது வாழ்க்கையில் அரசியல் பெரும் பங்கு வகிக்கிறது. அதனால் மாணவர்கள் அரசியலை அறிந்து கொள்ள வேண்டியது அவசியம்தான். ஆனால் பள்ளிகளையும் கல்லூரிகளையும்விட்டு, கட்சி அரசியலில் பங்கு கொள்ளுவதென்பது வேறு விஷயமாகும். இதைச் செய், அல்லது அதைச் செய் என்று பிறர் உங்களைக் கட்டாயப்படுத்தித் தூண்டும் போதோ, தூண்டாமலிருக்கும் போதோ, நீங்களேதான் தீர்மானம் செய்ய வேண்டும்" என்றும், மற்றும் ஒழுக்கம், இந்திய அரசியல் ஐக்கியம், பொறுப் புணர்ச்சி ஆகியவை பற்றியும் வலியுறுத்தினார்.

மாணவிகள் கூட்டத்தில், சென்னை ராஜ்ய மாணவர்களின் கட்டுப்பாட்டைப் பாராட்டினார்.

---

## அணு ஆயுத சோதனைகளைத் தடைசெய்ய

### ஜப்பான் ஐ. நா.வில் கோரும்

டோக்கியோ, ஆக. 6—

அணு ஆயுத சோதனைகளைத் தடைசெய்ய வேண்டும் என்று கோரும் தீர்மானம் ஒன்றை அடுத்து நடக்கவிருக்கும் ஐ. நா. சபைக் கூட்டத்தில் ஜப்பானியப் பிரதிநிதி பிரேரேபிப்பார். இந்தத் தகவலை ஜப்பானிய பிரதமர் கிஷி பத்திரிகை நிருபர்களிடம் வெளியிட்டார்.

உலகிலேயே முதன் முதலாக அணுகுண்டு வீசப்பட்டதன் 13-வது ஆண்டு விழா இங்கு அனுஷ்டிக்கப்படுகிறது. ஹிரோஷிமாவில் அமெரிக்கா அணுகுண்டு வீசி ஏற்பட்ட படுநாசம் தெரிந்ததே.

ஆயுதக் குறைப்பு என்ற பொதுப் பிரச்சினையுடன் இதை இணைக்காமல் அணு ஆயுதத் தடையை உறுதிப்படுத்த வேண்டும் என்றார் அவர்.

### உலகம்பட்டி தாலூகா விவசாயிகள் மகாநாடு நடத்த முடிவு

உலகம்பட்டி, ஜூலை 30—

உலகம்பட்டி தாலூகா விவசாயிகள் சங்க மகாநாட்டை 17-8-58-ல் நடத்துவதென்றும், மகாநாட்டிற்கு தோழர்கள் பி. ராமமூர்த்தி, மணலி கந்தசாமி, எம். கல்யாணசுந்தரம், பார்வதி கிருஷ்ணன், பொன்மலை பாப்பா ஆகியோரை அழைப்பதென்றும் அன்று இரவு கலா நிகழ்ச்சி நடத்துவதென்றும் திரு. புல்லான் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் முடிவு செய்யப்பட்டது. இதற்காக குரும்பூர் சின்னையாவை தலைவராகவும், பழ. மச்சக்காளை, தர்மலிங்கம் ஆகியோரை கூட்டுச் செயலாளர்களாகவும், சம்மைய வேளாரை பொருளாளராகவும் கொண்ட ஒரு தயாரிப்புக் குழு அமைக்கப்பட்டது.

---

## திரு. ஆயிக்கவுண்டர் காலமானார்

கோமயம்பாளையம் பஞ்சாயத்து உதவித் தலைவரும் கம்யூனிஸ்ட் கட்சி அனுதாபியுமான திரு. ஆயிக்கவுண்டர் ஜூலை 27-ந் தேதி காலமானார். அவர் பல ஆண்டுகளாகவே கம்யூனிஸ்ட் கட்சிமீது மிகுந்த பற்றுதல் வைத்திருந்தார். அவரது மறைவுக்கு கோயமுத்தூர் தாலுக்கா மேற்கு பிராந்திய கம்யூனிஸ்ட் கட்சி தனது ஆழ்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்கிறது.

---

# கேரள கம்யூனிஸ்ட் ஆட்சிக்கு மக்கள் உறுதுணையாக நிற்பர்

## கொல்லத்தில் பிரம்மாண்டமான ஊர்வலம்

கொல்லம், ஆக. 5—

தீரமாக ஆட்சி நடத்துங்கள், பொதுமக்கள் உங்களுக்கு உறுதுணையாக நிற்பார்கள் என்று கேரள கம்யூனிஸ்ட் ஆட்சியிடம் நம்பிக்கையைப் பிரகடனம் செய்யும் முறையில் கொல்லத்திலும், சேர்த்தலையிலும் பிரம்மாண்டமான ஊர்வலங்களும் பொதுக் கூட்டங்களும் நடைபெற்றன. எதிர்க்கட்சிகளின் அக்கிரமச் செயல்களையும் கண்டித்தனர்.

சந்தனத் தோப்பு துப்பாக்கிப் பிரயோகத்திற்குப் பின்னால் இரு தினங்களுக்கு முன் நடைபெற்ற காங்கிரஸ், பி. எஸ். பி., ஆர். எஸ். பி. கூட்டுச் சேர்ந்து நடத்திய ஊர்வலத்தைவிட இந்த ஊர்வலம் மிகப் பெரிதாக இருந்தது. இன்று ஆர். எஸ். பி. காங்கிரஸ் சேர்ந்து நடத்திய முந்திரி தொழிலாளர் ஊர்வலத்தைவிட மிகப் பிரம்மாண்டமாக இருந்தது.

மாலை 5 மணிக்கே நகரின் பல வார்டுகளிலிருந்தும் தொழிற்சாலைகளிலிருந்தும் தொழிலாளர்கள் சாரை சாரையாகத் திரண்டு வந்த வண்ணமிருந்தனர். தலைவர் இ. எம். எஸ். தீரமாக ஆட்சி நடத்துங்கள்! கேரள மக்கள் பின்துணையுண்டு. வஞ்சகரெல்லாம் சேர்ந்தாலும் கேரள ஆட்சி தகர்ந்திடாது என்று பல கோஷங்கள் எழுப்பப்பட்டன. ஒரு குறிப்பிட்ட முனையைத் தாண்டி ஊர்வலம் கடந்து செல்ல 45 நிமிஷங்கள் பிடித்தன.

கிருஷ்ண பிள்ளை தலைமையில் வி. பாஸ்கரன், கே. தாமோதரன் முதலியோர் பேசினார்கள்.

---

## அல்ஜீரிய தலைவர் தமிழ்நாடு சுற்றுப்பிரயாணம்

சென்னை, ஆக. 6—

இந்தியாவிற்கு வந்துள்ள அல்ஜீரிய தேசிய முன்னணித் தலைவர் திரு செரீப் குயல்லால் அவர்கள் ஆகஸ்டு 18 லிருந்து 25-ந் தேதி வரை தமிழ்நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்வார்.

18-ந் தேதி காலை 9 மணிக்கு சென்னை சென்டிரல் ஸ்டேஷனில் வரவேற்பு.

| | | |
|---|---|---|
| ஆக. 18 | சென்னையில் | பேசுகிறார் |
| 19 | திருச்சி | ,, |
| 20 | மதுரை | ,, |
| 21 | கோவை | ,, |
| 22 | சேலம் | ,, |
| 23 | வேலூர் | ,, |
| 24 | புதுவை | ,, |

25-ந் தேதி சென்னை திரும்பி பெங்களூருக்குச் செல்லுகிறார்.

ஆப்ரிக்க சுதந்திர இயக்கத்தை ஆதரித்து டில்லியில் நிறுவப்பட்டுள்ள ஆப்ரிக்க-ஆசிய ஒத்துழைப்புக்கமிட்டியார் மூலம் இந்தியாவில் பல ராஜ்யங்களில் அவர் சுற்றுப்பிரயாணம் செய்து அல்ஜீரிய சுதந்திர போராட்டத்தைப் பற்றியும், அரேபிய மக்களின் எழுச்சியை பற்றியும் சொற்பொழிவாற்றியுள்ளார். சென்னை நகரிலும், இதர ஊர்களிலும் ஒரு சர்வகட்சி வரவேற்புக் கமிட்டி அமைக்கப்பட்டு, அல்ஜீரிய உதவி நிதிக்கு செரீப் குயல்லால் அவர்களிடம் பணமுடிப்பு அளிக்க ஏற்பாடு செய்யப்பட்டு வருகிறது. தொழிற் சங்கங்கள் அல்ஜீரிய தலைவரின் தமிழ்நாடு சுற்றுப் பிரயாணத்தை வெற்றிகரமாக நடத்தித் தரவும், அல்ஜீரிய உதவி நிதிக்குப் பணம் திரட்டித் தரவும் முன்கையெடுத்து வேலை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறோம்.

டி. ஆர். கணேசன்
செயலாளர்
தமிழ்நாடு தொழிற்சங்க காங்கிரஸ்

---

## ஜனநாயகக் காங்கிரஸ் புதிய காரியக் கமிட்டி

சென்னை, ஆக. 7—

இந்திய தேசிய ஜனநாயகக்காங்கிரஸ் மத்தியக் கமிட்டி தீர்மானப்படி தலைவர் கே. எஸ். வெங்கட கிருஷ்ண ரெட்டியார் பின்கண்ட நிர்வாகிகளைத் தேர்ந்தெடுத்துள்ளார்;

உபதலைவர் டி. ஜி. கிருஷ்ணமூர்த்தி எம். எல். சி., பொதுக் காரியதரிசி எஸ். எஸ். மாரிசாமி, காரியதரிசிகள் டி. சுப்பிரமணிய ராஜா எம். எல். ஏ., ஓ. முத்துசாமி கவுண்டர், பொருளாளர் சி. ராமசாமி முதலியார்.

கமிட்டி உறுப்பினர்கள்: வி. கே. ராமசாமி முதலியார் எம். எல். ஏ., எல். எஸ். கரையாளர் எம். எல். சி, எம். எஸ். சிங்கராயர், கே. முத்துலிங்க ரெட்டியார், ஹெச். டி. ராஜா எம். பி., டி. எஸ். சசிவர்ண தேவர் எம். எல். ஏ., டி. எஸ். ராமசாமி பிள்ளை எம். எல். ஏ., எம். ஆர். சண்முகசுந்தரம், டாக்டர் வி. கிருஷ்ணமூர்த்தி, ஏ. எஸ். தாமோதர ராஜா, எஸ். சுயம்பிரகாசம், என். சாமிதுரை தேவர், டாக்டர் ஆர். காளமேகம், மலையாளம் பிள்ளை, பி. கே. மூக்கையாத் தேவர் எம். எல். ஏ., ஏ. துரைசாமி நாடார், வி. சுப்பாநாயக்கர் எம். எல். ஏ., எஸ். பெருமாள் ரெட்டியார், எம். ஜகன்னாதன் எம். எல். ஏ, வீ வேலு இன்னும் ஐவரின் பெயர்கள் சீக்கிரம் அறிவிக்கப்படும்.

---

## தொழில் தகராறுகளை துரிதமாகத் தீர்க்கவும்

### அதிகாரிகளுக்கு கேரள தொழிலமைச்சர் உத்தரவு

திருவனந்தபுரம், ஆக. 5—

தொழில் தகராறுகளை உடனடியாகத் தீர்ப்பதற்குத் துரிதமான நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்றும், தொழிலாளர் சட்டங்களைப் பயன்தரு முறையில் அமுல் நடத்த வேண்டும் என்றும் இந்த விஷயத்தில் அதிகாரிகள் கவனம் செலுத்த வேண்டும் என்றும் கேரள தொழிலமைச்சர் டி. வி. தாமஸ் உத்தரவு பிறப்பித்துள்ளார்.

இதையொட்டி இன்று நடைபெற்ற தொழிலாளர் துறை அதிகாரிகள் கூட்டத்தில் மந்திரி மேற்கண்டவாறு வலியுறுத்தினார். லேபர் கமிஷனர், உதவி லேபர் கமிஷனர்கள், பாக்டரி இன்ஸ்பெக்டர்கள், தோட்டத் தொழில் இன்ஸ்பெக்டர்கள் முதலியோர் கலந்து கொண்டனர்.

---

## பெரியகுளத்தில் கம்யூனிஸ்ட் கட்சிப் பொதுக்கூட்டம்

பெரியகுளம், ஆக. 1—

29-7-'58 அன்று பெரியகுளம் வடகரை அரண்மனை தெருவில் தோழர் எஸ். வி. தேவர் தலைமையில் நடைபெற்ற கம்யூனிஸ்ட் கட்சிப் பொதுக் கூட்டத்தில் தோழர்கள் காமாக்ஷி, பி. அப்துல் ரஹிமான் ஆகியோர் லெபனான், ஜோர்டானில் அமெரிக்க, பிரிட்டிஷ் ஆக்கிரமிப்பைக் கண்டித்தும் பெரியகுளம் ரஹீம் ட்ரான்ஸ்போர்ட் முதலாளி, தொழிலாளிகளைப் பழிவாங்கும் நோக்கத்தோடு வேலை செய்வதைக் கண்டித்தும் பேசினர்.

30-7-'58-ல் தென்கரை வாகம்புளி மைதானத்தில் நடைபெற ஏற்பாடு செய்யப்பட்டிருந்த கம்யூனிஸ்ட் கட்சிக் கூட்டத்தை போலீசார் திடீரென்று தடை செய்துவிட்டனர்.

ஒரு சில முதலாளிகளின் தூண்டுதலினாலேயே இவ்வாறு போலீஸ் பேச்சுரிமையைப் பறித்துள்ளனர் என்று இங்கு தொழிலாளர்களும், பொதுமக்களும் பேசிக்கொள்ளுகிறார்கள்.

# உச்சகட்ட மகாநாட்டைக் கூட்டுக!

## ஆக்கிரமிப்பாளர்கள் வெளியேறட்டும்!

## சோவியத், சீனத் தலைவர்களின் கூட்டறிக்கை

பீகிங், ஆக. 3—

ஜூலை 31 முதல் ஆகஸ்டு 3-ந்தேதி வரையில் சோவியத் கம்யூனிஸ்ட் கட்சி மத்தியக் கமிட்டியின் பிரதம செயலாளரும் சோவியத் யூனியன் மந்திரி சபைத் தலைவருமான என். எஸ். குருஷ்சேவும், சீனக் கம்யூனிஸ்ட் கட்சி மத்தியக் கமிட்டியின் தலைவரும் சீன மக்கள் குடியரசின் ஜனாதிபதியுமான மா சே-துங்கும் பீகிங்கில் சந்தித்து ஆலோசனைகள் நடத்தினர். இதில் சோவியத் தரப்பில் பாதுகாப்பு மந்திரி மார்ஷல் எ. ஒய். மாலினேவ்ஸ்கியும், உதவி அயல் நாட்டு மந்திரி வி. வி. குஸ்நெட்சோவும், சோவியத் கட்சியின் மத்தியக் கமிட்டி உறுப்பினர் பி. என். பொனோமரேவும் கலந்து கொண்டனர்; சீனாவின் தரப்பில் பிரதமர் சூ யென்-லாயும், துணைப் பிரதமரும் பாதுகாப்பு மந்திரியுமான மார்ஷல் பெங் டே-ஹுவாயும் துணைப் பிரதமரும் அயல் நாட்டு மந்திரியுமான சென்-இயும், சீனக் கம்யூனிஸ்ட் கட்சி மத்தியக் கமிட்டியின் செயற்குழு உறுப்பினர் வாங் சியா-சியாங்கும் பங்கெடுத்துக் கொண்டனர்.

உளமார்ந்த அன்பும் நேசமும் கலந்த சூழ்நிலையிலே, இருதரப்பினரும், இன்றைய சர்வதேச நிலைமை சம்பந்தமான முக்கிய அவசரப் பிரச்னைகளையும், இரு நாடுகளுக்கிடையிலுமுள்ள நேச உறவுகளையும் பரஸ்பர உதவியையும் மேலும் விரிவுபடுத்துவது சம்பந்தமான பிரச்னைகளையும், சர்வதேசப் பிரச்னைகளுக்கு சமாதானபூர்வமான தீர்வு காணுவது சம்பந்தமாகவும் உலக சமாதானத்தைப் பேணிப் பாதுகாப்பது சம்பந்தமாகவும் கூட்டாகப் போராடுவதுபற்றிய பிரச்னைகளையும் விரிவான முறையில் விவாதித்தனர்; இப்பிரச்னைகள் யாவற்றிலும் இருதரப்பினரும் முற்றிலும் ஒருமித்த கருத்துடையவராக இருப்பது கண்டு மகிழ்ச்சியடைந்தனர்.

### சமாதான சக்திகள் வளர்ச்சி

சர்வதேச கெடுபிடியைத் தணிவுறச் செய்து, சமாதானத்தைப் பாதுகாப்பதற்கான போராட்டத்தில் சோவியத் யூனியனும் மக்கள் சீனக் குடியரசும் ஏனைய சோஷலிஸ முகாம் நாடுகளுடனும், சமாதான வேட்கை கொண்ட நாடுகள் அனைத்துடனும் சேர்ந்து பிரமாதமான வெற்றிகளைச் சாதித்துள்ளன என்பது இரு தரப்பினரின் ஏகோபித்த கருத்தாகும். சோவியத் யூனியன், மக்கள் சீனக் குடியரசு இவ்விரு நாடுகளின் சமாதானக் கொள்கைக்கு உலக நாடுகள் யாவற்றின் அனுதாபமும் ஆதரவும் நாளுக்கு நாள் வளர்ந்து வருகின்றன. இந்தியா, இந்தோனேஷ்யா, ஐக்கிய அரபுக் குடியரசு ஆகிய நாடுகளும் இதர பல நாடுகளும், ஆசியா, ஆப்ரிக்கா, அமெரிக்கா, ஐரோப்பா ஆகிய கண்டங்களைச் சேர்ந்த மக்களும் சமாதானத்தை வலிமையுறச் செய்யும் பணியில் மென்மேலும் முக்கிய பங்கு வகித்துவருகின்றனர். உலகெங்கும் சமாதான சக்திகள் முன்பின் கண்டறியாத அளவுக்கு வளர்ந்தோங்கி விட்டன.

நமது இந்த தெட்டத் தெளிவான, முரணற்ற கொள்கை, நமது இரு நாடுகளின் ஜீவாதார நலன்களுக்கு மட்டுமின்றி, ஏனைய உலக நாடுகளின் நலன்களுக்கும் ஒத்ததாகும். ஆனால் அமெரிக்க ஏகபோக முதலாளித்துவ கோஷ்டிகளின் தலைமையில் செயல்பட்டுவரும் ஏகாதிபத்திய ஆக்கிரமிப்பு வட்டாரங்கள், இக் கொள்கைக்கு நேர் எதிரான முறையில், சமாதான சகவாழ்வையும் சமாதான பூர்வமான ஒத்துழைப்பையும் தொடர்ந்து எதிர்த்து வருகின்றன; சர்வதேச கெடுபிடியைத் தணிவுறச் செய்யும் பாதையை விடாப்பிடியாக நிராகரித்து வருகின்றன; வல்லரசு சர்க்கார் அதிபர்களின் மாநாட்டிற்கு முட்டுக்கட்டை போட்டு வருகின்றன; மற்றொரு யுத்தத்தைத் துவக்குவதற்கான முஸ்திபுகளில் முனைந்து, உலக சமாதானத்திற்கும் பந்தோபஸ்திற்கும் பெரும் அபாயத்தை ஏற்படுத்தி வருகின்றன. இந்த ஏகாதிபத்ய சக்திகள், சமாதானம், ஜனநாயகம், தேச சுயேச்சை, சோஷலிஸம் ஆகிய இலட்சியங்களுக்குச் சத்ருவாக செயல்பட்டு வருகின்றன; ஆக்கிரமிப்புத் தன்மை கொண்ட இராணுவ, அரசியல் கூட்டணிகளை நிறுவி வருகின்றன; உலக முழுதையும் வளைத்து தொடர்ச்சியாக நீண்டதொரு வலைப் பின்னலைப்போல் இராணுவத் தளங்களை அமைத்து வருகின்றன; பிற நாடுகளின் உள் விவகாரங்களில் மென்மேலும் அத்துமீறித் தலையிட்டு வருகின்றன.

### விடுதலை இயக்கத்திற்கு ஆதரவு

சமீபத்தில் அமெரிக்காவும் பிரிட்டனும் தமது ஆயுதப் படைகளைக் கொண்டு லெபனானிலும், ஜோர்டானிலும் நடத்தியுள்ள ஆக்கிரமிப்பும், இராக் குடியரசிற்கும் ஐக்கிய அரபு குடியரசிற்கும் எதிராக ஆயுத பலத்தை உபயோகிப்போம் என்ற அவர்களது பயமுறுத்தல்களும் சமீப, மத்தியக் கிழக்குப் பிரதேசத்தில் கெடுபிடியை வெகுவாக அதிகரிக்கச் செய்துள்ளன. இதனால் யுத்த அபாயம் மிகப்பெரிய அளவிற்கு அதிகரித்துள்ளது. இதை எதிர்த்து எங்கும் கண்டனம் எழுந்துள்ளது; எல்லா நாடுகளின் மக்களும் தமது ஆட்சேபணையைத் தெரிவித்து வருகின்றனர்.

அமெரிக்காவும் பிரிட்டனும் சமீப, மத்தியக் கிழக்குப் பிரதேசத்தில் மேற்கொண்டுள்ள துராக்கிரமான ஆக்கிரமிப்பு நடவடிக்கைகளை சோவியத் யூனியனும் மக்கள் சீனக் குடியரசும் வன்மையாகக் கண்டிக்கின்றன; சமீப, மத்தியக் கிழக்குப் பிரதேச நிலைமையை ஆராய்வதற்காக வல்லரசு சர்க்கார் அதிபர்களின் மாநாட்டை உடனே கூட்ட வேண்டும் என்று கோருகின்றன; உடனடியாக லெபனானிலுள்ள அமெரிக்கத் துருப்புகளும் ஜோர்டானிலுள்ள பிரிட்டிஷ் துருப்புகளும் வாபஸாக வேண்டும் என்று வலியுறுத்துகின்றன.

சோவியத் யூனியனும் மக்கள் சீனக் குடியரசும் ஐக்கிய அரபுக் குடியரசு, இராக் குடியரசு, மற்றுமுள்ள அரபு நாடுகள் யாவற்றின் மக்களுடைய நியாயமான போராட்டத்தையும், ஆசிய, ஆப்ரிக்க, லத்தீன் அமெரிக்க மக்களின் தேச விடுதலை இயக்கத்தையும் உறுதியாக ஆதரிக்கின்றன.

சமீப, மத்தியக் கிழக்கிலும் உலகின் இதர பகுதிகளிலும் நடைபெற்றுவரும் நிகழ்ச்சிகளின் முக்கியத்துவம் என்ன? தேச விடுதலை இயக்கம் வெல்லற்கரியது என்பதையும், காலனி ஆதிக்க சகாப்தம் மீண்டும் தலைதூக்க முடியாதவாறு முடிவுற்றுவிட்டது என்பதையும், காலனி ஆதிக்க அமைப்பை நிலைநாட்டுவதற்கோ அன்றி புதுப்பிப்பதற்கோ செய்யப்படும் முயற்சிகள் யாவும் சரித்திரத்தின் வளர்ச்சிப் போக்கிற்கும் உலக சமாதானத்திற்கும் எதிரானது என்பதையும், இம் முயற்சிகள் படுதோல்வி அடைவது திண்ணம் என்பதையும் இந் நிகழ்ச்சிகள் மீண்டும் ஊர்ஜிதம் செய்கின்றன.

### பூரண உடன்பாடு

இன்றைய சர்வதேச நிலைமையையொட்டி, ஆசியாவிலும் ஐரோப்பாவிலும் எழுந்துள்ள மிக முக்கியப் பிரச்னைகள் பலவற்றைக் குறித்து இரு தரப்பினரும் விரிவான முறையில் கருத்துப் பரிமாறிக் கொண்டதன் விளைவாக, ஆக்கிரமிப்பை எதிர்ப்பது சம்பந்தமாகவும் சமாதானத்தைப் பாதுகாப்பது சம்பந்தமாகவும் எடுக்க வேண்டியுள்ள நடவடிக்கைகள் குறித்து பூரண உடன்பாடு ஏற்பட்டுள்ளது.

சர்வதேச கெடுபிடியைத் தணித்து, மற்றொரு யுத்தத்தின் படுநாச விளைவுகளைத் தடுப்பதற்கு சோவியத் யூனியனும் மக்கள் சீனக் குடியரசும் தம்மாலானது அனைத்தையும் செய்யத் தவறமாட்டா. எல்லா நாடுகளின் மக்களும் அவரவர்க்கு விருப்பமான சமுதாய, அரசியல் அமைப்பைத் தேர்ந்தெடுத்துக் கொள்வதற்கு உரிமை உண்டு. உலக ரீதியில் விரிவான ஆதரவைப் பெற்றுள்ள புகழ்மிக்க ஐம்பெரும் கோட்பாடுகளின் அடிப்படையில் மாறுபட்ட சமுதாய அமைப்புகளையுடைய நாடுகள் சமாதானமாக ஒருங்கே ஒத்துவாழ வேண்டும். தீர்க்கப்படாதுள்ள எல்லா சர்வதேசப் பிரச்சினைகளும் பேச்சுவார்த்தைகளின் மூலம் சமாதான வழியில் தீர்க்கப்பட வேண்டும். பரஸ்பர அனுகூலத்தின் அடிப்படையிலும், பல்வேறு நாடுகளுக்கிடையிலும் பரஸ்பர நல்லுணர்வை வளர்க்கும் வகையிலும் சமாதான பூர்வமான போட்டியின் அடிப்படையிலும், சர்வதேச கெடுபிடியைத் தணிவுறச் செய்து, உலக சமாதானத்தைப் பாதுகாக்கும் இலட்சியத்திற்கு முற்றிலும் ஏற்புடைய வகையிலும் பொருளாதார, கலாச்சார உறவுகள் வளர்ந்தோங்குவதற்கு ஆக்கம் அளிக்க வேண்டும். இவை யாவற்றையும் இரு தரப்பினரும் மீண்டும் ஒருமுறை வலியுறுத்திக் கூற விரும்புகின்றனர்.

தற்பொழுது சமாதானத்தைப் பேணிப்பாதுகாத்து வலிமையுறச் செய்ய வேண்டுமானல் ஆயுதங்களைக் குறைப்பது: அணு ஆயுத சோதனைகளைக் கைவிடுவது, அணு, நீர்வாயு ஆயுதங்களின் உபயோகத்திற்குத் தடை விதிப்பது, பிற நாடுகளின் பிரதேசங்களில் நிறுவப்பட்டுள்ள இராணுவக் கூட்டணிகள் இராணுவத் தளங்கள் யாவற்றையும் கலைப்பது, சமாதான-கூட்டு பந்தோபஸ்து ஒப்பந்தம் ஒன்றை ஏற்படுத்திக் கொள்வது ஆகியவை சம்பந்தமாக அரசுகளுக்கிடையில் உடன்பாட்டை ஏற்படுத்த வேண்டும். இதுவே இன்றைய தலையாய கடமை. ஆயினும் யுத்தத்தைத் தவிர்ப்பதானது, சமாதான வேட்கைகொண்ட நாடுகளின் மக்களுடைய நல்லெண்ணத்தையும், அவர்கள் ஒருதலையாக எடுக்கும் நல்ல நடவடிக்கைகளையும் மாத்திரம் பொறுத்ததல்ல.

### உறவின் சிறப்பு

மேற்கு வல்லரசுகளைச் சேர்ந்த ஆக்கிரமிப்பு வட்டாரங்கள், சமாதானத்தை நிலைநாட்டுவதற்கான உருப்படியான நடவடிக்கைகள் எதையும் மேற்கொள்வதற்கு இன்னமும் இணங்கியபாடில்லை. மாறாக அவை, சர்வதேச கெடுபிடியை மேலும் மோசமடையச் செய்யும் கண்மூடித்தனமான காரியத்தைச் செய்து வருகின்றன; மனித வர்க்கத்தை யுத்தம் என்ற படுகுழியின் விளிம்பில் நிறுத்தி வைத்துள்ளன. ஆனால், யுத்த வெறிபிடித்த ஏகாதிபத்திய வெறியர் கூட்டம் உலக மக்களின் மீது யுத்தத்தை திணிக்கத் துணிந்தால், சமாதானம் விரும்பும் சுதந்திர வேட்கைகொண்ட எல்லா நாடுகளும் மக்களும் தோளோடு தோள் நின்று, ஏகாதிபத்திய ஆக்கிரமிப்பாளர்களை என்றென்றும் தலைதூக்க முடியாதவாறு இறுதியாக ஒழித்துக்கட்டி, உலகம் பூராவிலும் நிரந்தர சமாதானத்தை ஏற்படுத்துவார்கள் என்பதை அவர்கள் தெரிந்துகொள்வது நல்லது.

சகோதர நேசவுறவுகளும் விரிவான ஒத்துழைப்பும் பரஸ்பர உதவியும் செவ்வனே வளர்ந்தோங்கி வருகின்றன. இத்தகைய உறவுகள் சோவியத் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் சீனக் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் இடையிலும், இரு நாடுகளின் சர்க்கார்களுக்கிடையிலும், இரு நாடுகளின் மக்களுக்கிடையிலும், மென்மேலும்வளர்ந்தோங்கி வருகின்றன. இது குறித்து இரு தரப்பினரும் பெருமகிழ்ச்சி அடைகின்றனர். இரு நாடுகளின் பொருளாதாரமும் ஓங்கி வளர்ந்து, அவற்றின் பலம் தொடர்ந்து பெருகுகிறது. பூரண சமத்துவத்தின் அடிப்படையிலும் தோழமையுடன்கூடிய பரஸ்பர உதவியின் அடிப்படையிலும் இரு நாடுகளுக்கிடையிலும் ஏற்பட்டுவரும் ஒற்றுமையும் ஒத்துழைப்பும் உயிர்த்துடிப்புமிக்க மகத்தான சக்திகளாகும். இந்த ஒற்றுமையும் ஒத்துழைப்பும் இரு நாடுகளும் சோஷலிஸ, கம்யூனிஸப் பாதையில் துரிதமாக முன்னேறுவதற்கு உதவுவதுடன், பொதுவாக சோஷலிஸ முகாம் முழுமையும் வலிமையுறுவதற்கும் உதவுகின்றன.

### நம்பிக்கை

இரு நாடுகளுக்கிடையிலும் ஏற்பட்டுள்ள விரிவான ஒத்துழைப்பை சகல துறைகளிலும் வளர்ந்தோங்கச்செய்வதற்கு உத்தரவாதம் செய்வதென்றும், சோஷலிஸ முகாமின் ஒற்றுமையையும் சமாதான வேட்கை கொண்ட எல்லா நாடுகளுக்கிடையிலும் இருந்துவரும் ஒருமைப்பாட்டையும் மேலும் வலிமையுறச் செய்வதென்றும் இரு தரப்பினரும் தீர்மானித்தனர்; விவாதிக்கப்பட்ட பிரச்னைகள் யாவற்றிலும் இருதரப்பினரும் ஒருமித்த கருத்துக்களைத் தெரிவித்தனர்.

சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியையும் சீனக் கம்யூனிஸ்ட் கட்சியையும் எதிர்நோக்கும் கடமைகளை நிர்ணயிப்பதில் இரு தரப்பினரும் முற்றிலும் ஒருமித்த கருத்துடையவர்களாக உள்ளனர். இந்த இரு மார்க்ஸிஸ-லெனினிஸக் கட்சிகளுக்கிடையிலுமுள்ள தகர்க்க முடியாத ஒற்றுமையானது, நமது பொது இலட்சியத்தின் வெற்றிக்கு என்றென்றும் நம்பகமான உத்தரவாதமாகும்.

சோவியத் கம்யூனிஸ்ட் கட்சியும் சீனக் கம்யூனிஸ்ட் கட்சியும் இந்தப் புனித ஒற்றுமையை இடையறாது பேணிப் பாதுகாக்கும்; மார்க்ஸிஸம்-லெனினிஸத்தின் தூய்மையைப் பாதுகாக்கத் தொடர்ந்து போராடும்; கம்யூனிஸ்ட், தொழிலாளர் கட்சிகளின் மாஸ்கோ பிரகடனத்தில் கண்டுள்ள கோட்பாடுகளை சிரமேற்கொண்டு பணியாற்றும்; கம்யூனிஸ இயக்கத்தை எதிர்நோக்கும் பிரதான அபாயமான திருத்தல்வாதத்தை எதிர்த்து விடாப்பிடியாகப் போராடும். இந்தத் திருத்தல்வாதம், யுகோஸ்லாவிய கம்யூனிஸ்ட் கழகத்தின் வேலைத் திட்டத்தில் பகிரங்கமாகத் தலைதூக்கியுள்ளது. நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்துவரும் சமாதான, சோஷலிஸ சக்திகள் முன்னேற்றப் பாதைக்கு முட்டுக்கட்டையாகவுள்ள யாவற்றையும் தகர்த்தெறிந்து, மகத்தான வெற்றியைக் காண்பது திண்ணம் என்று இரு தரப்பினரும் தமது முழு நம்பிக்கையைத் தெரிவித்துக் கொள்கின்றனர்.

(ஒப்பம்)

என். எஸ். குருஷ்சேவ்,
மா சே-துங்

## கேரளக் காங்கிரஸ் தலைவர்கள் ஏமாற்றம்!

### நேருவின் அறிக்கை அவர்கள் எதிர்பார்த்த அளவு இல்லையாம்!

புதுடில்லி, ஆக. 8—

கேரளத்திலுள்ள நிலைமை சம்பந்தமாக பிரதமர் நேரு நேற்று பத்திரிகை நிருபர் கூட்டத்தில், கேரள கம்யூனிஸ்ட் சர்க்காரைக் குறை கூறும் முறையில் ஒருதலைப்பட்சமாக விமர்சனம் செய்திருந்தாரல்லவா? அது, இங்கு வந்துள்ள கேரளப் பிரதேச காங்கிரஸ் தூதுக் குழுவினருக்கு ஏமாற்றத்தையே அளித்திருக்கும். ஏனெனில் கேரளத்தில் மத்திய சர்க்கார் உடனடியாகத் தலையிட்டு கேரள கம்யூனிஸ்ட் மந்திரி சபைக்கெதிராகக் கடுமையான நடவடிக்கை எடுக்கப்பட வேண்டும் என்ற குறிக்கோளுடன்தான் அவர்கள் டில்லிக்குக் காவடி எடுத்து வந்தார்கள். ஆகவே தற்போதைக்கு மத்திய சர்க்காரின் தலையீடு கிடையாது; எதிர்காலத்தில் என்ன செய்வோம் என்பது எதிர்காலத்தைப் பொறுத்துள்ளது என்று பிரதமர் கூறிவிட்டதைக்கண்டு, இங்கு காவடிஎடுத்து வந்துள்ள தாமோதரமேனன், பனம்பள்ளி கோவிந்தமேனன், ஸ்டீபன் ஆகியோர் ஏமாற்றமடைந்திருப்பது இயற்கையே.

கேரள சர்க்கார் இந்திய அரசியல் சட்டத்திற்குப் புறம்பாகச் செல்கிறார்களா என்று ஒரு நிருபர் கேட்ட கேள்விக்கு, "இல்லை; நான் அவ்வாறு கூறமுடியாது" என்று நேரு கூறினார்.

கேரளத்திலேற்பட்டுள்ள நிலைமைக்கு அங்குள்ள ஆளுங் கட்சிதான்பெரிய அளவுக்குப்பொறுப்பு என்று கூறிய நேரு, இதர கட்சிகளின் நடவடிக்கைகளும் ஓரளவுக்குக் காரணமாயிருக்கலாம் என்றார்.

மேலும், கேரளத்தில் "இதரா கட்சிகளின்" சில தலைவர்களுடைய பிரசங்கங்களின் தொனியைத் தான் விரும்பவில்லை யென்றும் பிரதமர் நேரு கூறினார்.



Printed & Published by S. Krishnaswamy at Janasakthi Press, 32. Broadway, Madras.
Editor: P. Jeevanandam